திருவள்ளுவராண்டு 2038
தை - ஜனவரி 2007

91/1

ரூ. 5.00

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்





சிறப்பாசிரியர்: தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவராண்டு 2038 (விய) | மாதம் : தை |
| மலர் : 21 | இதழ் : 1 |



# என்று தணியும் எங்கள் தண்ணீர்த் தாகம்

பொங்கல் பொங்கட்டும்! மகிழ்ச்சியும் அன்பும் எங்கும் பொங்கி வழியட்டும்! இன்று உலகு எங்கும் பல தினங்கள் கொண்டாடப் படுகின்றன. அன்னையர்தினம், தந்தையர் தினம், காதலர் தினம் என்று வரிசையாய்த் தினந்தோறும் தினங்கள் கொண்டாடப் படுகின்றன. தினம் தினமும் சேர்ந்து வாழ வேண்டிய உறவுகளுக்குக்கூட நாம் தினங்கள் கொண்டாடுகின்றோம் என்றால் நாம் உறவுகளை விட்டு அந்நியமாய் விலகி வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்று தான் பொருள். பொங்கல் திருநாள் உணர்வுகள் மங்கி மறந்து விடாமல் இருக்கக் கொண்டாடுகின்ற சம்பிரதாய விழா அல்ல! நாம் ஊனும் உயிருமாய் உலகில் நடமாடுவதற்கு, உதிரத்தை வியர்வையாக்கி, வறுமையை வாழ்க்கையாக்கி, உழைப்பைத் தவமாக்கி வாழ்கின்ற உழவர் உலகத்திற்கு நன்றி அறிவிக்கும் நல்திருநாள்! நெல்மணிகள் எனும் பொன்மணிகளை ஈந்திட்ட நிலமகள் எனும் கண்மணிக்கு நன்றி தெரிவிக்கும் நல் திருநாள்!

*"உழுத நோன்பகடு அழிதின்றாங்கு"*

- என்ற புறநானூற்று வரிகளுக்கு ஏற்ப எஞ்சிய வைக்கோலை உண்டு, மனிதகுலம் வாழ உணவுப்பயிரை உற்பத்தி செய்யும் காளைகளின் கடமைகளுக்குக் கட்டியம் கூறும் வீரத் திருவிழா! காளைகளை அடக்கும் காளையருக்கு கன்னியர்கள் மாலை சூட்டிய காலம் உண்டு! இன்றோ, கன்னியர் கழுத்தில் மாலைகள் சூட்டக் காசுகள் கேட்கும் காளையர்களாய் மாறிவிட்டனர்.

*"இல்என்று இரப்போர்க்கு*
*இயைவது கரத்தல்*
*வல்லா நெஞ்சம் வலிப்ப*
*நம்மினும்*
*பொருளே காதலர் காதல்"*

என்பது சங்கப் பாடல் வரிகள்.

திரைகடல் ஓடித் தேடிய செல்வத்தை உழைப்பால் ஈட்டிய உன்னதச் செல்வத்தைச் சேர்ந்து கூடி உண்டு வாழ்ந்த தமிழ்ப் பண்பாடு தடம் மாறிவிட்டது.

உழவர் வாழ்க்கைதான், உலக உயிர்க்குல வாழ்க்கையின் அச்சாணி, என்று திருவள்ளுவப் பெருமான் பெருமைப்படுத்தினார்.

தொழில்களுக்கு எல்லாம் மூலமும் முதலும் உழவே என்ற வரிசையில் தான். உழவுக்கு முதல் வணக்கம் செய்தான் பாரதி! பெருமைப்படும் விவசாய வாழ்வு வறுமைப்பட்டதாகவே அமைந்துவிட்டது! மண்வளத்தையும், மனிதவளத்தையும் நம்பியிருக்கும் பரந்த தேசத்தில் தாராளமயம் ஆக்கப்பட்ட பொருளாதாரக் கொள்கை வளர்ந்த சில நாடுகளுக்கும், வளர்ந்த பன்னாட்டு நிறுவனங்களுக்கும் தாரளமாய் பொருள் ஈட்ட தாழ் திறந்து விட்டுள்ளது. தாராளமயம் இப்பொழுது தண்ணீர் பட்ட பாடு!

தண்ணீர் பட்ட பாடா! தவறு! தவறு! தண்ணீருக்கு நாம் படும்பாடு சொல்லி மாளாது! நாம் மண்ணைத் தோண்டி பொன்னை எடுக்கலாம்; இனி தண்ணீரை எடுக்க முடியுமா? நம் வீட்டுத் தண்ணீரை பாட்டிலில் அடைத்துப் பாதுகாப்பாய் (பாதுகாக்கப்பட்ட குடிநீர் என்று) விற்கின்ற பன்னாட்டு நிறுவனங்கள்!

*"தொட்டனைத் தூறும் மணற் கேணி*
*மாந்தர்க்கு தோண்ட தோண்ட ஊறும் செல்வம்"*

- என்பது புதிய குறள் ஆகிவிட்டது.

வரப்புச் சண்டைகளுக்காக வயல்களை விற்று வழக்கு நடத்திய பங்காளிகள் உண்டு! மண்ணிற்காய், பொன்னிற்காய், பொருளுக்காய் நடந்த வழக்குகள் உண்டு. தண்ணீருக்காய் வழக்கு நடந்தது உண்டோ?

தாகத்தோடு தமிழகம் இரண்டு எல்லை மாநிலங்களில் தண்ணீர் வரம் கேட்டு நீதிமன்றங்களில் கண்ணீரோடு கை ஏந்தி நிற்கின்றது!

*"கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்*
*காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்!*
*சிங்கமராட்டியர்தம் கவிதை கொண்டு*
*சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்"*

என்று பரிமாறிக் கொள்ளச் சொன்ன பாரதியின் பண்டமாற்றுப் பொருளாதாரக் கொள்கையில் இந்திய தேசிய ஒருமை நிறைந்திருந்தது. இன்று சுதந்திர இந்தியாவில் இந்திய தேசியம் என்பதே வெறுமை ஆகிவிட்டதோ என்று எண்ணத் தோன்றுகின்றது. செப்புமொழி பதினெட்டிற்கும், சிந்தனை ஒன்றுதான் என்பதும் சிதைந்து விட்டது. இந்தியப் பாரம்பரியப் பண்பாட்டின் அடையாளமாகிய கூட்டுக் குடும்ப வாழ்க்கை சிதைந்து போய்விட்டதைப் போல, இந்தியாவின் மாநிலங்கள் சிக்கல் சிக்கலாய் சிக்கித் தவித்துக்கொண்டிருக்கின்றன!

தமிழா! நீ தாகத்தோடு வாழவே சபிக்கப்பட்டவனோ?

*என்று மறையும்*
*எங்கள் தண்ணீர்த் தாகம்?*
*அன்று மறையும்*
*எங்கள் கண்ணீர் வாழ்வின் சோகம்!*

அண்டங்களையும் கண்டங்களையும், அறிவியல் தொழில் நுட்பங்களால் ஆளுகின்ற மானுடமே!

இனி ஒரு புதிய விதி செய்வோம்!

உலக உயிர்க்குலம் தழைக்க, காற்றையும், நீரையும் சிறைவைக்காது காப்போம்! அதை எந்நாளும் காப்போம். கண்ணீர் வடுக்கள் மறையக் காலம் கனியும் என்று காத்திருப்போம்! அதுவே நாம் காண விரும்பும்

*புதிய வானம்!*
*புதிய பூமி!*

அனைவருக்கும் இனிய பொங்கல் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 71. குறிப்பறிதல்

நடை, உடை பாவனைகளால் ஒருவருடைய எண்ணத்தை அறிந்து கொள்ளுதல்.

குறிப்பாகப் பொறிகளில் ஏற்படும் அசைவுகள், மாற்றங்களைக் கொண்டு ஒருவருடைய எண்ணத்தை அல்லது நோக்கத்தைத் தெரிந்து கொள்ளல்.

வாழ்க்கையை இனிய வெற்றிகளுடன் இயக்கக் குறிப்பறிந்து செய்தலும் ஒழுகுதலும் துணை.

*கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்*
*மாறாநீர் வையக்கு அணி.* (701)

ஒருவர் ஒன்றைக் கூறாமலே முகம், கண் இவற்றை நோக்குவதின் மூலம் அறிவோர் என்றும் இந்த வற்றாத கடல் சூழ்ந்த உலகத்திற்கு அணி.

குறிப்பறிந்து செய்வோர் வளம் பெறுவார் என்பதால் "மாறாநீர் வையம்" என்று கூறி விளக்கினார்.

*ஐயப் படாஅது அகத்தது உணர்வானை*
*தெய்வத்தோடு ஒப்பக் கொளல்.* (702)

ஒருவர் அகத்தில் உள்ளதை ஐயத்திற்கு இடமின்றி உணர்வோரை, தெய்வத்தினைப் போலக் கொண்டு மதித்திடுக.

மாந்தரிடம் இயல்பாக உள்ள குறைந்த ஆற்றல்களைப் போல் அல்லாமல் உயரிய ஆற்றல் இருப்பின் தெய்வத்தின் ஆற்றல் என்று கோடல் மரபு.

*குறிப்பின் குறிப்புஉணர் வாரை உறுப்பினுள்*
*யாது கொடுத்தும் கொளல்.* (703)

தமக்குத் துணையாகத் தனது குறிப்புகளின் வாயிலாகவே குறிப்பினை அறிந்து செயல்படுவாரைத் தமது செயலுக்குரிய உறுப்புகளுள் ஒருவராக எது கொடுத்தும் கொள்க.

குறிப்பிற் குறிப்புணர்தல் என்பதற்கு, பிறர் குறிப்பினை அறியும் என்ற பொருள் சிறப்புடையதன்று.

"உறுப்பு" என்றது பிழையில்லாத ஒத்துழைப்பு என்று நம்பிக்கையை உணர்த்த, "யாது கொடுத்தும் கொளல்" என்றது கிடைத்தற்கரிய அருமையை அறிவுறுத்த, பெரும்பயன் விளையும் ஆதலால் யாது கொடுத்தும் கொள்க என்றார்.

*குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை*
*உறுப்புஓர் அனையரால் வேறு.* (704)

ஒருவர் எண்ணியதை அவர் கூறாமலேயே அறிவாரே சிறந்த உறுப்பு. அஃதறிய இயலாதார் உறுப்பால் ஒத்திருந்தாலும் அறிவால் வேறுபட்டவரேயாம்.

ஒருவருக்கு உறுப்பாக அமையும் இயல்பினைப் பெற்றவர்கள் அவர்தம் குறிப்புணரும் அறிவினராயிருத்தல் இயற்கை.

உறுப்பாக அமைந்திருப்பது போலத் தோற்றம். ஆனால் அன்பில், உணர்வில் உறுப்பின் இயல்பு அமையாதவர்கள் உளத்தால் வேறுபட்டோர் என்பது அறிக.

*குறிப்பின் குறிப்புஉணரா வாயின் உறுப்பினுள்*
*என்ன பயத்தவோ கண்.* (705)

ஒருவரது எண்ணத்தினைக் குறிப்பால் உணர முடியாது போயின் உறுப்புக்களுள் சிறந்த கண்களின் பயன் என்ன?

"கண்" பேசுதலுக்கும் உணர்த்துதலுக்கும் உரிய கருவி, உய்த்துணர்வார் கிடைத்தால்.

*அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்*
*கடுத்தது காட்டும் முகம்* (706)

பளிங்கு தன்னை அடைந்த பொருளினைக் காட்டும். அதுபோல, நெஞ்சத்தின் கடுப்பினை (கோபத்தை) முகம் காட்டும்.

பொதுவாக நெஞ்சத்து ஏற்படும் அனைத்து உணர்வுகளையும் காட்டும் திறன் முகத்திற்கு உண்டு.

*முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்*
*காயினும் தான்முந் துறும்.* (707)

மக்களுக்கு அவர்தம் முகத்தினும் முதிர்ந்த அறிவுடைய உறுப்பு பிறிதொன்று இருக்கிறதா? தம்மையுடையார் மகிழும்பொழுது

மலர்ச்சியையும், சினம் கொள்ளும் பொழுது கருகிய நிலையினையும் முந்திக் காட்டும்.

"அகத்தின் அழகு முகத்தில் தெரியும்" என்ற பழமொழி அறிக.

ஒருவருடைய அகத்தினை அவருடைய முகத்தினைக் கொண்டே அறியலாம்.

*முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி*
*உற்றது உணர்வார்ப் பெறின்.* (708)

தம்முன் நிற்கும் ஒருவருடைய அகத்தின் எண்ணங்களை அறிய முற்படுவாருக்கு முகம் நோக்கி நிற்றலே போதும். வாயினால் சொல்ல வேண்டுவதில்லை.

ஒருவருடைய முகத்தினைக் கொண்டே அகத்தினை உணர்ந்தறியும் ஆற்றலுடையாரின் முகம் நோக்கி நின்றாலே போதும்.

முகத்தினால் உணரும் திறனுடையார்க்கு, வாயினால் சொல்ல வேண்டியதில்லை.

*பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்*
*வகைமை உணர்வார்ப் பெறின்.* (709)

கண்ணினுடைய பார்வை வகைகளை உணர்வாருக்கு, கண்களே ஒருவருடைய பகைமையையும், உறவையும் எடுத்துக் கூறும்.

கண்ணின் பார்வைக்கு ஓராயிரம் பொருளுண்டு. கண்ணின் பார்வைத் திறன்களின் வேறுபாட்டை அறிந்தவர்க்குக் கண்ணே பகையையும் உறவையும் கூறும்.

*நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணுங்கால்*
*கண்ணல்லது இல்லை பிற.* (710)

நுண்ணறிவுடையோரைக் கண்டறியும் அளக்குங்கோல் கண்களேயாம்; பிற அல்ல.

ஒருவருடைய நுண்ணறிவுத் திறனையும் கண்கள் கண்டறியும்.

*(தொடரும்)*



"மக்கள் சிந்தனை" வாசகர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் இனிய பொங்கல் வாழ்த்துக்கள்!

(ஐப்பசி இதழ்த் தொடர்ச்சி)

# கம்பன் என்றொரு மானிடன்

(தமிழாகரர்.பேராசிரியர். **சாமி. தியாகராசன்**)

தென்றலின் பொதுவான இயல்பு எல்லாருக்கும் இன்பத்தைத் தருவதேயாகும். தனியாக இருக்கும் ஆடவருக்காயினும் பெண்டிருக்காயினும், காதலரைக் கூடியிருப்போருக்காயினும் அனைவருக்கும் தென்றல் சுகம்தரும். காதலரைப் பிரிந்தோர்க்குக் கூட வாடை அளவிற்குத் தென்றல் துன்பம் தராது. அதனால்தான் சங்கப் புலவர்கள் வாடைக் காற்றுக்குத் தந்த முக்கியத்தைத் தென்றலுக்குத் தரவில்லை போலும். சிறிது நேரமே நின்று செல்லும் இயல்புடையது தென்றல். வாடை அப்படிப் பட்டதன்று. மாலைக் காலம் தொடங்கி இரவு விடியல் காலை என நீண்டபொழுது வாடை வாட்டும். தென்றல் மாலைக் காலத்தோடு நின்று விடும். தென்றல் சுகம் ஒரு குழந்தையின் பரிசத்தைப்-போன்றது. இதனை எல்லாம் நன்குணர்ந்த நமது கம்பன்

"நேரிழை மகளிர் கூந்தல் நிறை நறை வாசம் நீந்தி
வேரியம் சரளச் சோலை வேனிலான் விருந்து செய்ய .
ஆர்கலி அமுதம் தந்த அமிழ்தென ஒருவர் ஆவி
தீரினும் உதவற்கு ஒத்த தென்றல் வந்து இறுத்தது அன்றே"

(சூர்ப்பணகை. சூழ்ச்சிப்படலம் - 163)

என்று சொல்லுகின்றான். ஒருவருடைய உயிர் போகின்ற காலத்தில் அவருடைய உயிர் போகாமல் தடுத்து நிறுத்தும் அமிழ்து போன்றது தென்றல் என்று அக்காற்று இச்செய்யுளில் பேசப்படுகின்றது. (எனினும் இராவணனைப் பொறுத்த மட்டில் அவன் உயிரைப் பறிப்பது போல் வந்தது என்பது குறிப்பு). இவ்வாறு போற்றப்படும் தென்றல் அடுத்து வரும் செய்யுளில் நச்சுடைய அரவமாகக் கம்பனால் சித்தரிக்கப்படுகிறது அது ஏன்?

குளிர் ஊட்டப்பட்ட மண்டபத்தில் குளிர்ச்சி பொருந்திய தளிர்களும் பூக்களும் பரப்பப்பட்ட படுக்கையில் இருக்கும் இராவணன் மாற்றான் மனைவியை மனத்தில் வைத்திருக்கின்றான். இந்தப் பாவகாரியத்தைச் செய்ததால் அவன் பீடும் பெருமையும் இழந்து சிறுமையுற்றிருக்கின்றான்.

இராவணனுக்குப் பகைவர்களாகிய தேவர்களில் ஒருவனான தென்றல், இவனைத் துன்புறுத்திப் பார்க்க இதுதான் தக்க தருணம் எனக் கருதி அவனைத் தீண்டுகின்றான். தீண்டுதல் என்ற சொல்லுக்குத் தொடுதல் என்பது பொருள். தொடுதல் வேறு அணைத்தல் வேறு, புல்லுதல் வேறு. இவற்றிடையே வேறுபாடு உண்டு. குழந்தையின் உடலைத் தொட்டுப் பார்த்தாலே பரவசம் நேரிடும். அதனை அணைக்கவோ புல்லவோ தேவையில்லை. இதே தீண்டுதல் என்னும் வழக்குப் பாம்பு கடிக்கும் வழங்கி வருதலை நாம் அறிவோம். இன்னும் நாட்டுப்புறங்களில் பாம்பு கடியைப் பாம்பு தீண்டியது என்று சொல்லும் வழக்கம் உண்டு. நாய்க்கடி, குரங்கு கடி போன்று பாம்பு கடி அழுத்தமானதன்று. மேலாகக் கடிப்பதால் அதனைத் தீண்டுதல் என்கிறோம். மேலும் மோகினிப்பேய் அல்லது பிசாசு என நாட்டுப்புறங்களில் வழக்கில் உள்ள பேயினை அணங்கு என்ற சொல்லால் நமது இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அணங்கு என்ற சொல்லுக்குத் தீண்டி வருத்தும் பெண் தெய்வம் என உரையாசிரியர்கள் பொருள் சொல்லுகின்றனர். இப்பெண் தெய்வம் ஒருவனைத் தீண்டினால் அதாவது தொட்டாலே அவன் உயிருக்கு இறுதி நேரிடும் என்பது குறிப்பாகும். அணங்கு என்றும் தாக்கணங்கு என்றும் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். இதே தீண்டுதல் என்னும் சொல்வழக்குத் தென்றலுக்கும் உரியது. தென்றல் தீண்டுகிறது என்றால் அக்காற்று உடலுக்கு வருத்தம் தராமல் மென்மையாகப் பட்டுச் செல்கின்றது என்பது பொருளாகும்.

பாம்பு தீண்டுவதற்கும், அணங்கு தீண்டுவதற்கும், தென்றல் தீண்டுவதற்கும், குழந்தை தீண்டுவதற்கும் வேறுபாடு உண்டு. பாம்பு தீண்டினால், அணங்கு தீண்டினால் உயிருக்கு இறுதி நேரிடும். ஆனால் தென்றல் தீண்டினால் உயிர் தளிர்க்கும். குழந்தை தீண்டினால் நம் உடலில் ஓர் இன்பம் பரவும்.

(தொடரும்)

## மண்பானையும் மனமும்

புதிய பானை பொங்கலுக்குத் தேவை. அது போலவே, மனித வாழ்க்கையின் இணைப்புக்கும் மகிழ்ச்சிக்கும் புதிய மனம் தேவை. சென்றதை நினைந்து கவலையில் ஆழ்தலோ, சென்றதை நினைந்து குத்திக் குறைகாட்டுதலோ நல் வாழ்க்கைக்கு உரியனவல்ல.

**– அருள்நெறித் தந்தை**

# வாயில் எது?

(கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**)

காதலுக்கு வாயில்எது? கண்கள்! நல்ல
கவிதைக்கு வாயில்எது? உணர்ச்சி! பாழும்
மோதலுக்கு வாயில்எது? கோபம்! வாழ்வின்
முன்னேற்ற வாயில்எது? உழைப்பு! நெஞ்ச
வேதனையின் வாயில்எது? குற்றம்! காணும்
விடியலுக்கு வாயில்எது? ஊக்கம்! என்றும்
சாதனைக்கு வாயில்எது? முனைப்பு! நந்தம்
தமிழுக்கு வாயில்எது? இனிமை என்பேன்!

பதவிக்கே வாயில்எது? உதவி! போற்றும்
பண்புக்கே வாயில்எது? ஒழுக்கம்! செய்யும்
உதவிக்கே வாயில்எது? பரிவு! கேட்கும்
உரிமைக்கே வாயில்எது? கடமை! ஓடும்
நதிப்பெருக்கின் வாயில்எது? அருவி! பேசும்
நாவன்மை வாயில்எது? கருத்து! தோன்றும்
புதுமைகட்கே வாயில்எது? தேடல்! ஆழ்ந்த
புலமைக்கே வாயில்எது? நூல்கள் என்பேன்!



# சிந்தித்து வாழ்வை உயர்வாக்கு

(கவிஞர். **குறள்பித்தன்**)

அன்பால் விளைவது மகிழ்வாகும்!
அறிவால் விளைவது உயர்வாகும்!
இன்னல் துடைப்பது தொண்டாகும்!
ஏழையில் சிரிப்புக்கற் கண்டாகும்!
புன்னகை புரிவது நன்றாகும்!
பகையிலா வாழ்வு குன்றாகும்!
தன்னலம் தவிர்த்தல்தனித் தடமாகும்!
தண்டமிழ் காத்தல்நம் கடனாகும்!

மரங்களை வளர்த்தால் மழையுண்டு!
மண்வளங் காத்தால் பயனுண்டு!
இரக்கம் கொண்டால் இழிவில்லை!
ஈயார் தமக்கோ விழியில்லை!
அரக்க மனத்தால் உய்வில்லை!
ஆன்றோர் வாக்குப் பொய்யில்லை!
உரக்கச் சிந்தனை செய்திடுவோம்!
உலகில் எல்லாம் எய்திடுவோம்!

கன்னலில் கிடைப்பது கற்கண்டு!
கழனியில் கிடைப்பது நெற்குன்று!
பொன்னால் மேனிக்கு அழகுண்டு!
பெண்ணால் மனைக்குப் பொலிவுண்டு!
தென்னை வளர்த்தால் பயனுண்டு!
தீமைகள் வளர்ந்தால் பயமுண்டு!
தன்னையே உணர்தல் பெருந்தொண்டு!
தரணிக்குச் செய்வோம் பொதுத்தொண்டு!

பறவைகள் இனத்தில் பேதமுண்டா?
பாம்புக்கும் பல்லிக்கும் வேதமுண்டா?
உறவுடன் வாழ்வன அவையாகும்?
ஒருக்கணம் உணர்ந்தால் சுவையாகும்!
பிறர்குறை காண்பது மனிதனடா?
பூமிக்கு அவன்தான் பாரமடா!
சிறப்புடன் அறிவை விரிவாக்கு!
சிந்தித்து வாழ்வை உயர்வாக்கு!

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

## சிற்பங்கள்

குடைவரைக் காலத்தைச் சேர்ந்தவையாக எந்தச் சிற்பமும் இங்கில்லை.12 சுந்தரபாண்டியர் காலத்து முருகன் தேவியருடன் எழுந்தருளியுள்ளார். இவரது பின்கைகளில் வலப்புறம் சக்தியும் இடப்புறம் வஜ்ரமும் உள்ளன. வலமுன்கை காக்கும் குறிப்பிலிருக்க இடமுன்கை கடியவலம்பிதமாக உள்ளது. கரண்டமகுடம், மகர குண்டலங்கள், மூன்று ஆரங்கள், கங்கணங்கள், வளைகள், ஸ்கந்த மாலை, உதரபந்தம், உபவீதமாய் முப்புரிநூல், தாள்செறி, பட்டாடை அணிந்து எடுப்பான நாசியும் இளநகையுமாய்க் காட்சிதரும் வேலவரின் வலப்புறம் தெய்வானையும் இடப்புறம் வள்ளியும் உள்ளனர். பின்னால் மயில்.

கரண்ட மகுடர்களாகக் காட்சிதரும் தேவியர் இருவரும் ஒரு கையை நெகிழ்த்தி மறுகையில் மலரேந்தியுள்ளனர். உடைந்து போயிருக்கும் வள்ளிச் சிற்பத்தின் தலைப்பகுதி மெழுகால் உடலுடன் இணைக்கப்பட்டுள்ளது. நாகர் வடிவங்களில் பாம்புப் படத்தின் கீழே கண்ணனின் ஆடல் தோற்றம் காட்டப்பட்டுள்ளது.

## கல்வெட்டுகள்

இக்குடைவரையில் மட்டும் பதினாறு கல்வெட்டுகள் உள்ளன. தூண்களில் எட்டும் சுவர்களில் ஏழும் முகப்புத்தரையில் ஒன்றுமாய் வெட்டப்பட்டுள்ள இவற்றுள் புதிதாகக் கண்டறியப்பட்ட இரண்டும் முகமண்டப மேற்குச் சுவரில் முருகன் திருமேனிக்குப் பின்புறத்தே உள்ளன. இப்பதினாறு கல்வெட்டுகளுள் முதல் குலோத்துங்கர் காலத்தவை ஆறு. பாண்டியர்களுடையவை ஏழு. மன்னர் பெயரற்றவை மூன்று. இக்கல்வெட்டுகளிலிருந்து கிடைக்கும் செய்திகளைக் கல்வெட்டுகளின் பார்வையில் குன்றக்குடி என்ற தலைப்பின் கீழ் விரிவாகப் பார்க்கலாம்.

## இரண்டாம் குடைவரை

முதற் குடைவரையை அடுத்துள்ள இரண்டாம் குடைவரையும் கருவறை, முகமண்டபம், முகப்பு என்ற அமைப்பிலேயே குடையப் பட்டுள்ளது. 3.67 மீ நீளமும் 1.06மீ. அகலமும் உள்ள முன் தரையையும் முகமண்டபத் தரையையும் நான்கு தூண்கள் அமர்ந்துள்ள 5.62மீ. நீளமும் 73 செ.மீ அகலமும் கொண்ட முகப்புத் தளம் பிரிக்கின்றது. இத்தூண்களுள் இடைத்தூண்கள் சதுரம், சுட்டு, சதுரமெனப் பொளியப்பட்ட முழுத்தூண்கள், பக்கத்தூண்கள் அரைத் தூண்களாய் முதற் குடைவரை போலவே நான்முகமாகக் காட்டப்பட்டுள்ளன. இத்தூண்கள் எழும் தளம் முன்தரையைவிட 12 செ.மீ உயர்த்தப்பட்டுள்ளது. முகமண்டபத் தரை இத்தளத்தில் சற்றுத் தாழ்வாக உள்ளது.

தூண் போதிகைகளின் கீழ், மேற்கைகள் சில இடங்களில் ஏறத்தாழ ஒரே அளவினதாகவும் சில இடங்களில் கீழ்க்கையைப் போல் மேற்கை இருமடங்கு அளவினதாகவும் உள்ளன. மேற்கை உத்திரத்தைத் தொடுமிடத்தில் முதற் குடைவரையைப் போலவே சிறு மடிப்புப் பெற்றுள்ளது. போதிகைகளின் மேல் உத்திரமும் உத்திரத்தின் மேல் வாஜனமும் காட்டப்பட்டுள்ளன.

வாஜனம் முதற் குடைவரையைப் போல் முகப்போடு நின்று விடாமல், முகப்பின் பக்கச் சுவர்களில் இறங்கி அங்குள்ள வாயிற் காப்போர் கோட்டங்களின் வெளி அரைத்தூண்களின் மேல் முடிகிறது. பாறையின் இயற்கைச் சரிவு முகப்புக் கூரையாக நீள்கிறது. இதனுடன் சரியாகப் பொருந்துமாறு திருநடைமாளிகையின் கூரை ஒட்டப்பட்டுள்ளது. முன் தரையில் கருவறைக்கு எதிரே பிற்காலத்து நந்தியொன்று நிறுவப்பட்டுள்ளது.

முகப்பை ஒட்டிய பக்கச் சுவர்க் கோட்டங்களில், தரையிலிருந்து நன்றாக உயர்த்தப்பட்டுள்ள தளங்களின் மீது (மேற்கில் 42 செ.மீ. கிழக்கில் 41 செ.மீ) நின்ற கோலத்தில் நேர்ப்பார்வையராய் வாயிற் காவலர் காட்சிதருகின்றனர். இவர்கள் நிற்கும் கோட்டங்களின் வெளிப்புறத்தே அகலம் குறைந்த அரைத்தூண்கள் பொளியப் பட்டுள்ளன. இத்தூண்களுக்கும் வாயிற்காவலர் தளங்களுக்கும் இடையில் இடைவெளி உள்ளது.

கிழக்கு மேற்காக 5.96மீ. நீளமும் தென்வடலாக 1.58மீ அகலமும் கொண்டமைந்துள்ள முகமண்டபத்தின் பின்சுவரில் கருவறை குடையப்பட்டுள்ளது. கருவறை வாயிலுக்கு இருபுறமும் உள்ள சுவர்களும் கிழக்குச் சுவரும் கூரையும் வெறுமையாக உள்ளன. மேற்குச் சுவரில் கோட்டம் அமைத்துப் பேரளவினராகத் திருமாலும் அருகே

தோழமைத் தொண்டராய்க் கருடனும் பொளியப்பட்டுள்ளனர். இவர்கள் நிற்கும் தளம் முகமண்டபத் தரையிலிருந்து 45 செ.மீ உயரத்தில் உள்ளது.

பெருமாளும் கருடனும் செதுக்கப்பட்டிருக்கும் 2மீ. உயரமும் 1.54மீ. அகலமும் கொண்டமைந்துள்ள கோட்டத்தின் பக்கங்களில் இரண்டு சிறு அரைத்தூண்கள் எளிய போதிகைகளுடன் காட்டப் பட்டுள்ளன. இப்போதிகைகள் முடியும் சிறிய அளவிலான உத்திரம், கோட்டத்தின் மேல்நிலையாக அமைந்துள்ளது. முகமண்டபத்தின் இடப்புறத்தே சேத்ரபாலர் திருமேனியொன்று தனிச் சிற்பமாய் நிறுவப்பட்டுள்ளது. குடைவரையோடு தொடர்பில்லாத, இப்பிற்பாண்டியர் கால நிறுவல் குறித்து இரண்டு கல்வெட்டுகள் பேசுகின்றன.13

இத்திருமேனியிருக்கும் இடத்தைத் தனித் திருமுன்னாகக் காட்ட முயன்றதன் விளைவாகக் கற்சுவரொன்று முகப்பிலிருந்து நடைமாளிகைவரை நீண்டு அதன் பின்வரிசைத் தூண்களை ஒட்டிக் கிழக்கு முகமாகத் திரும்பிப் பிள்ளையார் கோட்டப் பாறையுடன் முடிகிறது. இச்சுவரின் அரவணைப்பால் முகமண்டப இடப்புற முழுத்தூண் தன் எழிலையும் தன்மீதுள்ள கல்வெட்டில் பாதியையும் இழந்து பரிதவித்து நிற்கிறது. கலைநோக்கற்ற பிற்காலத் திருப்பணியாளர்கள் பல கோயில்களில் இது போல் தேவையற்ற கட்டுமானங்களை உருவாக்கியுள்ளனர்.

கிழக்கு மேற்காக 2.87மீ. நீளமும் தென்வடலாக 2.80மீ. அகலமும் 2.18மீ. உயரமும் பெற்றுள்ள கருவறையின் வாயில் நிலையமைப்புப் பெற்றுள்ளது. 1.82மீ உயரமும் 97 செ.மீ. அகலமும் பெற்றுள்ள இவ்வாயிலுக்கு இரண்டு படிக்கட்டுகள் உள்ளன. கருவறையின் தரை, கீழ் நிலையைவிடச் சற்றுத் தாழ்வாக இருக்கக் கூரை மற்றும் பக்கச் சுவர்கள் வெறுமையாக உள்ளன.

கருவறையின் நடுவில் தாய்ப்பாறையில் உருவாக்கப்பட்டுள்ள இலிங்கம் உபானம், ஜகதி, எண்பட்டைக் குமுதம், கம்புகள் தழுவிய கண்டம், பட்டிகை இவற்றால் அழகூட்டப்பெற்ற 72 செ.மீ. உயரமான சதுர ஆவுடையாரும் 1.50மீ. சுற்றளவும் 66செ.மீ உயரமும் கொண்ட பாணமும் பெற்றுள்ளது. ஆவுடையாரின் இடப்புறமும் வலப்புறம் மேற்குப் பார்வையாய் அமைந்துள்ள சிறு கோமுகமும் சிதைந்துள்ளன.

சிற்பங்கள்

வாயிற்காவலர்களும்14 திருமால் கருடன் தொகுதியும் குடைவரைக் காலத்துச் சிற்பங்கள். சேத்ரபாலர், பிற்பாண்டியர்

காலத்தினர். வாயிற்காவலர்கள் முகப்பின் பக்கச் சுவர்களில் மேற்கில் ஒருவரும் கிழக்கில் ஒருவருமாய் எதிரெதிர்ப் பார்வையில் உள்ளனர்.

முகப்புத் தரையிலிருந்து 42செ.மீ உயரத் தளத்தின்மீது வலப்பாதத்தைப் பார்சுவத்திலும் இடப்பாதத்தை நேராகவும் வைத்தபடி பாம்பு சுற்றிய உருள்தடியின் மீது வலமுழங்கை படிந்திருக்க, மணிக்கட்டையும் விரல்களையும் கீழ்நோக்கி நெகிழ்த்தி நிற்கும் மேற்குக் காவலரின் வலப்பாதம் சரியாகப் பொளியப்படவில்லை. உருள்தடியின் கீழ்முனை விரல்களுக்கிடையில் உள்ளது.

இடக்கையைத் தொடையில் ஊன்றிக் கோவணச் சிற்றாடையுடன் விளங்கும் இவரின் இடைக்கட்டு முடிச்சுத் தொங்கல் வலப்புறம் நெகிழ்ந்துள்ளது. அரைக்கச்சின் முடிச்சுத் தொங்கல்கள் கால்கள்மீது படிந்துள்ளன. பட்டையான உதரபந்தம், பாம்புக் கங்கணங்கள், மணிகள், ருத்திராக்கம் பதித்த பட்டை வளைகள், திரட்சியான உபவீத முப்புரிநூல், சரப்பளி, மகர, பூட்டுக் குண்டலங்கள் அணிந்து சடைமகுடராய்க் காட்சிதரும் இவர் மகுடத்தின் வலப்புறம் பிறையும் பின்னால் தலைச்சக்கரமும் காட்டப்பட்டுள்ளன. மகுடமுகப்பில் காட்டப்பட்டுள்ள மழு இவரை மழுவடியாராக அடையாளப்படுத்துகிறது.15

கிழக்குக் காவலர் 41 செ.மீ உயரத் தளத்தின்மீது வலப்பாதத்தைத் திரயச்ரமாகவும் இடப்பாதத்தை நேராகவும் வைத்துச் சற்றே வலப்புறம் சாய்ந்த நிலையில் காட்சிதருகிறார். வலச்செவியில் பனையோலைக் குண்டலம், இடச்செவியில் செவிப்பூ, சிறுவளையம்; மார்பில் மணிகள் பதித்த முப்புரிநூல்; கழுத்தில் சரப்பளி, இடக்கை மார்பின் குறுக்கே வலப்புறம் வந்து உருள்தடியின் மேற்பகுதியைப் பற்றத் தடியின் மேல்முனை, நெகிழ்கையாக 16 உள்ள வலக்கைக் குழிவுக்குள் பொருந்தியுள்ளது. இவ்வலக்கையின் கீழ்ப்புறத்தே பாம்பொன்று காட்டப்பட்டுள்ளது.

சடைமகுடத் தலையின் பின்னால் தலைச்சக்கரமும் மகுட முகப்பில் தலையோடும் காட்டப்பட்டுள்ளன. மேற்புறத்தார் போல இவருக்குப் பிறையில்லை எனினும், அதற்குப் பதிலாக இவரது மார்பின் இடமேற்பகுதியில், முப்புரிநூலின் பிரம்ம முடிச்சையொட்டியும் இடச்செவி வளையத்திற்கு அருகிலுமாய்க் கால்களை மார்போடு மடித்துக் கீழ் நீட்டியுள்ள நிலையில் இறக்கைகள் ஒன்று சேர மடிக்கப்பட்ட தோற்றத்தில் பறவை போன்ற ஒரு வடிவம் காட்டப்பட்டுள்ளது. இது அணிகலனா அல்லது வேறு எதையேனும் குறிக்கும் குறியீடா என்பது தெரியவில்லை.

இக்காவலரின் தோள்களுக்குப் பின்னால் வடிக்கப்பட்டுள்ள சூலஇலைகள்17 இவரைச் சூலதேவராக அடையாளப்படுத்துகின்றன.

முந்தானையுடனான கோவண ஆடை பெற்றுள்ள இவரது அரைக்கச்சும் அதன் முடிச்சுத் தொங்கல்களும் அழகுபடக் காட்டப்பட்டுள்ளன. பக்கத்திற்கு மூன்று புரிகளாய் இரு தொடைகளின்மீதும் படர்ந்து, ஆங்காங்கே சிறு வளையங்களால் பிணைக்கப்பட்டு, நடுப்பகுதியில் பின்னல் முடிச்சுகளால் அழகுபடுத்தப்பட்டுள்ள இடைத் தொங்கல் அணி தமிழர்தம் கலைத்திறனுக்குச் சான்றாக நிற்கிறது.

## திருமாலும் கருடனும்

முகமண்டபத்தின் மேற்குச் சுவர் கோட்டத்தில் திருமாலும் கருடனும் அருகருகே காட்டப்பட்டுள்ளனர். திருமால் கிரீட மகுடத்துடன், கச்சம் வைத்த பட்டாடையும் இடைக்கட்டும் அணிந்து, இடைக்கட்டின் முடிச்சுகள் இருபுறமும் சரிய, இடமுன்கையின் முழங்கைப் பகுதியைக் கருடனின் வலத் தோளின்மீது அழுத்திக் கையை நெகிழவிட்டுக் காட்சிதருகிறார்.18.

இவரது வலமுன்கை முழங்கையருகே மடக்கப்பட்டு மார்பருகே திருப்பப்பட்டுள்ளது.19 இக்கையின் கட்டைவிரல் நடுவிரலின் மேல் கணுவைத் தொட்டபடி இருக்க, மற்ற விரல்கள் நீண்டு இன்னதென்று விளங்காத ஒரு முத்திரையில் காட்சிதருகின்றன. ஆடற்கலை நூல்களிலோ, சிற்ப நூல்களிலோ இம்முத்திரையை இனம் காண முடியவில்லை.

வலப்பாகத்தை நேராகவும் இடப்பாகத்தை பார்சுவமாகவும் வைத்து நிற்கும் திருமாலின் பின்கைகளில் இடப்புறம் சங்கு, வலப்புறம் சக்கரம் இருந்து பிற்காலத்தில் தகர்க்கப்பட்டுள்ளது. செவிகளில் மகரகுண்டலங்கள், செவிப்பூ. இவரது கிரீடத்தின் பின்னால் தலைச்சக்கரம் காட்டப்பட்டுள்ளது. மார்பில் சன்னவீரம்20, கங்கணங்கள், பட்டை வளைகள் அணிந்து மலர்ச்சியான முகத்துடன் காட்சியளிக்கும் இவரது இடச் சுண்டுவிரலை மோதிரமொன்று அழகு செய்கிறது. கால்களில் தாள்செறிகள்.

திருமாலின் இடப்புறம் பயபக்தியுடன் இருபுறமும் இறக்கைகளைச் சுருக்கியபடி மனித வடிவில் கருடன் காட்சிதருகிறது. இதன் பாதங்களும் திருமாலின் பாதங்களைப் போலவே அமைந்துள்ளன. இருகைகளையும் மார்பின் குறுக்காக மடித்தவாறு காட்சிதரும் கருடனின் கழுத்தில் சரப்பளி, செவிகளில் பனையோலைக் குண்டலங்கள், கைகளில் கங்கணங்கள், வளைகள், குமிழ் போன்ற எழுச்சியுடன் உள்ள மகுடம் சற்றுப் புதுமையாக, மாமல்லபுரப் பாறைச்சிற்பத் தொகுதியில் உள்ள குரங்கொன்றின் தலையலங்காரத்தை ஒத்து அமைத்துள்ளது. இடையில் அரைக்கச்சு இருந்தும் கோவண ஆடை.

சேத்ரபாலர்

சுடர்முடியுடன் நிர்வாணியாய்க் காட்சிதரும் சேத்ரபாலரின் பின்கைகளில் வலப்புறம் உடுக்கையும் இடப்புறம் பாசமும் இருக்க, வலமுன்கையில் முத்தலை ஈட்டியும் இடமுன்கையில் தலையோடும் உள்ளன. உதரபந்தம், உபவீதமாய் முப்புரிநூல், குண்டலங்கள், வீரக்கழல்கள் கொண்டு சமபாதராய்த் தளத்தின்மீது நிற்கும் இறைவனின் பின்புறம் நாய். இது இறைவன் கையிலுள்ள தலையோட்டிலிருக்கும் ஊனையருந்த முனைப்புக் காட்டுவது போல் அமைக்கப்பட்டுள்ளது.

(தொடரும்)

## சமய வாழ்வு

சட்டமும் சலுகைகளும் சாதியக் கொடுமைகளை அகற்றிவிட முடியாது. அவை புண்ணுக்குப் புனுகு தடவும் வேலையைப் போன்றது. மனமாற்றத்தை உருவாக்க வேண்டும். அனைவரையும் உடன் பிறப்புக்களாகக் கருதிப் பழகுகின்ற மனிதநேயத்தை உருவாக்க வேண்டும். அனைவரையும் உடன்பிறப்புகளாகக் கருதிப் பழகுகின்ற மனிதநேயத்தை விதைக்க வேண்டும். மனித உரிமைகளைத் தர மறுக்கின்ற மனோபாவத்தை அன்பு எனும் அற்புத சக்தியால் மாற்ற வேண்டும்.

– தவத்திரு பொன்னம்பல அடிகளார்

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*– ஆசிரியர்*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்

**ஆதிகுரு முதல்வர்**

**அருளாளர் தெய்வசிகாமணி பரமாசாரிய சுவாமிகள்**

# *போற்றித் திருவேண்டல் பதிகம்*

("நவரசக் கவிமணி" **ஏ.டி.எம். பன்னீர்ச்செல்வம்**)

முழுமுதற் குருவே மலரடி போற்றி!
முகிழ்த்திடு ஆசைகள் முறிப்பாய் போற்றி!
அழுதிடும் நாட்களை அறுப்பாய் போற்றி!
அருணையின் அரசனே அற்புத போற்றி!
உழுதிடு உளங்களை உத்தம போற்றி!
உள்ளொளி கிளப்பியே உதவுக போற்றி!
தொழவரும் தினங்களைக் கூட்டுவாய் போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

சண்முக நாதனின் தலத்தோய் போற்றி!
சிவகுக குகைசிரி செவ்வேள் போற்றி!
எண்டிசைப் பரவிய இறையொளி போற்றி!
ஏகாந்த சேவை எழுந்தருள் போற்றி!
அண்டமாம் பெருவெளி அளந்தாய் போற்றி!
அய்ந்து கோயில்கள் அதிப்தி போற்றி!
தண்டமாம் பிறவிகள் தவிர்த்தாய் போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

மெய்கண்ட தேவனின் மாணவ போற்றி!
மேலான ஞானமணி வைத்திய போற்றி!
கைகண்ட மருந்துநீ காப்புநீ போற்றி!
காலநதி வெள்ளத்தைக் கடந்தவா போற்றி!

பெய்கின்ற சாதிநெறி பொசுக்குவாய் போற்றி!
பேரின்ப ஞானமே போதமே போற்றி!
செய் கின்ற செயல்களைச் செதுக்குவாய் போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

பூரட் டாதியில் புகுந்தவா போற்றி!
பூமியில் தீமைகள் பொசுக்குவாய் போற்றி!
யாரும் தொழவர இசைந்தவா போற்றி!
யாதுமே நின்செயல் அறிகுவோம் போற்றி!
வேறாம் குணங்களை விலக்குவ போற்றி!
வசீகரத் தமிழ்ப்பயிர் வளர்ப்பவ போற்றி!
தாரும் என்றிடத் தருவோய் போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

குன்றக் குடிவளர் குருவே போற்றி!
குவலயந் தொழுதிடு குணநெறி போற்றி!
குன்றாத் தமிழ்க்கனல் கொடுத்தாய் போற்றி!
கோணல் பொழுதுகள் களைவாய் போற்றி!
நன்றிக் குரியனே நாதனே போற்றி!
நாளும் திருமடம் நடத்துவ போற்றி!
தென்றல் சுகமொத்த சிவப்பழம் போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

---

**உரிமையும் கடமையும்**

நாடுகளுக்கும், தனி நபர்களுக்கும் உள்ள உரிமைகளைப் பற்றி நாம் பேசுகிறோம். ஆனால் ஒவ்வோர் உரிமைக்கும் கடமை உண்டு என்பதை மறந்துவிடலாகாது. உரிமைகளை வற்புறுத்தும் நாம் கடமைகளைப் பற்றி நினைப்பதில்லை. கடமைகளை நன்கு செய்துவிட்டால் உரிமைகள் தாமாக வந்துவிடுகின்றன.

– அண்ணல் நேரு

# "அம்மானை அழகர்"

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி)

அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய மெய்ப்பொருள் நாயனார்,

*தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்*
*ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும் என்று*
*நாடிய மனத்தி னோடு நாயன்மார் அணைந்தபோது*
*கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்துவந்தார்.*

என்று தெய்வச்சேக்கிழார் மெய்ப்பொருளாரின் வாழ்வைப் பற்றிக் கூறினார். இவ்வாக்கு தெய்வ வாக்கு என்பதால் இவ்வுண்மையை மெய்ப்பொருளார் போன்ற மெய்யன்பர்களோடும் பொருத்திப் பார்க்கலாம் என்பதற்குச் சான்றாக வாழ்பவர்தான் திருச்சி ப. மூக்கப்பிள்ளை என்பதை உறுதிப்படுத்த எழுந்த படைப்பே "கயிலைத் திருமணி அம்மானை - 108" என்ற நூலாகும்.

நூலின் கருப்பொருள் மூக்கப்பிள்ளையாயினும் அதன் முதற் பொருளாக உள்ளவர் படைப்பாளி ப. அரங்கசாமி ஆவார். நூலின் உரிப்பொருள், நூலைத் துய்த்துப் பயன்கொள்வோர் ஆவர்.

இம்முக்கூட்டுப் பொருட்செறிவின் நூலாக்கத்தில் புகழ்ந்தேரில் பவனிவரும் பிள்ளையவர்களை அருமையான சித்திரக்கவித்தேரில் ஏற்றி அழகுபார்க்கும் அரங்கசாமிப் புலவர் "பூவாழி" என வாழ்த்தின் வடந்தொட்டிழுத்து "காலம் தந்த கயிலை மணி வாழி" என்பதாக வாசகர் நெஞ்சில் தேரை நிலைகுத்தச் செய்கிறார். பின்னர் அம்மானைப் பாடலென்னும் நூற்றெட்டுத் தமிழ்ப்பாவான கனிந்த வாழைத்தார்களைத் தேர்மீதிருந்து அள்ளி வீசும்போது கவிஞரைப்போலப் பாடலாம் பழங்களை அவரவர்க்கேற்பப் பெற்று அனுபவிக்கும் சாயலில் அமைகிறது இக்கட்டுரை.

தேரை இரட்டை வடங்கொண்டு இழுப்பதைப்போல இந்நூல் அமைந்த நாலடி மற்றும் ஆறடித்தரவு கொச்சகக் கலிப்பா என்னும் இருவகையாலான உண்மையை உறுதிப்படுத்த விழைந்த நூலாசிரியர், காரைக்கால் அம்மையார் இருவேறு பாவால் பாடிய இரட்டை மணிமாலையைச் சாட்சிக்கு அழைத்துக் கூறுவதன் மூலம் (பாடல் 26) இந்நூல் பழம்புகழ் பேணவும் புதுப்புகழ் புதுக்கவுமாகச் செய்யப்பட்டது எனலாம்.

*இரட்டைமணி மாலையெனும் இலக்கியநூல் கூறுகிற*
*இரட்டைவகை பாபோற்றும் எம்மான்தான் யாரேடீ?*
*இரட்டைவகை பாபோற்றும் எம்மான்தான் எப்போதும்*
*இரட்டைக்கை கூப்பிவர வேற்பவர்காண் அம்மானாய்*

அடுத்து தேருக்கான இருசக்கரங்களைப் போல இந்நூல் சங்கத் தமிழாலும் சமயத் தமிழாலும் மிளிர்கின்றது. புலவர் பாடும் புகழுடையோர் எனக்கூறும் புறநானூற்றின்படி (27) மூக்கப்பிள்ளையும் "புலவர்களின் பாடல்பெறும் பேறேதம் பெருமையெனக் கொள்பவர்" என்கிறது 25ஆம் பாடல். மேலும் அவர் கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர் எனக் கூறும் திருமுகாற்றுப்படை தொடருக்கேற்ப முற்றிவாளராகத் திகழ்பவர் என்பதை 63ஆம் பாடல் உறுதிப்படுத்துகிறது. இயல்புடைய மூவர்க்கு இல்வாழ்வான் என்பான் துணை என்ற குறட் கருத்துக்கு இவர் சொந்தக்காரர் என்பதை 66ஆம் பாடல் உணர்த்துகிறது.

இப்படிச் சங்க நூல்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு கருத்துகளின் சாயலாகப் பிள்ளையவர்களைக் காட்டும் நூலாசிரியர், சமயத் தமிழோடு தொடர்புபடுத்திக் கூறுவதில் வல்லவர் என்பதை அவர் எடுத்தாண்ட பன்னிரு திருமுறை ஆட்சியால் நன்குணரலாம்.

மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் என்ற சம்பந்தர் தேவாரப்படி மூக்கப்பிள்ளை வாழ்வதை 50ஆம் பாட்டு சுட்டுகிறது. எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமும் கண்டால் உள்கி என்ற அப்பர் தாண்டகப்படி அடியார் தோற்றப் பொலிவானார் பிள்ளை, என்கிறது 102 ஆம் பாடல். இறைவன் பண்ணிடைத் தமிழ் ஒப்பானவன் எனச் சுந்தரர் கூறுதற்கேற்ப "பண்ணின் தமிழிசைப் பாடலை இறையெனப் படிஏத்துபவர்" தான் கயிலை மணியார் எனப் புகழ்கிறது 50ஆம் பாடல்.

உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்தென் உளம் மன்னி என்ற திருவாசக உருக்கத்தால் சிவத்தொண்டு புரிபவர் என்பதை 96ஆம் பாடல் கூறுகிறது. ஆண்டவனுக்குச் சேந்தனார் பாடிய பல்லாண்டைப் போல இந்நூலாசிரியரும் 62ஆம் பாடலால் பிள்ளையவர்கட்குப் பல்லாண்டிசைக்கிறார். பரத்தை மறைத்தன பார்முதல் பூதங்கள் என்பதன்றி அவை பரத்தில் மறைந்தன என்ற திருமந்திரத் தத்துவத்தை உணர்ந்தவர் என 42ஆம் பாடல் உணர்த்துகிறது. ஆண்டவனிடம், நெஞ்சம் தளரும்போது அருள்வாய் என இரட்டை மணிமாலையில் வேண்டிய காரைக்காலம்மையைப் போலவும் சொல்லால் சிந்தையால் செயலால் வரும் குற்றங்களைத் தவிர் எனக் கேட்ட பட்டினத்தாரையும்

போல் வாழ்ந்த பதினோராந் திருமுறைக் கருத்தின்படி மூக்கப்பிள்ளை வாழ்பவர் என்பதை 106, 69ஆம் பாடல்கள் கூறுகின்றன. பெரியபுராணத்தில் சேக்கிழார் செய்வானும் செய்வினையும் அதன் பயனும் கொடுப்பானும் எனக் கூறிய நான்கையும் அறிந்தவர் அவர் என்பதை 48ஆம் பாடலில் விளக்கும் ஆசிரியர், பிள்ளையவர்களைத் திருமுறை வாழ்வினர் என்பதைத் தெள்ளத்தெளிய உணர்த்தினார் எனலாம்.

இன்னும் பிள்ளையவர்கள், தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்ற ஒளவை வாக்கின்படியும் (34) செல்வம் என்பது சிந்தையின் நிறைவே என்ற குமரகுருபரர் கருத்தின்படியும் (70) வாழ்பவர் என்பதை நூலாசிரியர் தக்கவாறு கூறியுள்ளார். திருவாசகத்திற்கு வாச்சியம் (உட்பொருள்) அம்பலவாணரே எனக்கூறித் திருவாசகத்தைப் போற்றிய சிவப்பிரகாசரின் கருத்தின்படித் திருவாசக வாழ்க்கை வாழ்பவர் பிள்ளை என்பது 16ஆம் பாடலாலும் தாயுமானவர் கூறிய கொல்லா விரதத்தினர் என்பது 67 ஆம் பாடலாலும் உறுதிப்படுகின்றன. இப்படியாக முற்கால, பிற்கால அருளாளர்களின் வாசகங்களோடு பொருத்திக் கூறும் இந்நூலின் இலக்கியப் போக்கினைத்தேரின் சக்கரங்கட்கமைந்த அச்சாணியாகக் கருதலாம். இதில் வடலூர் வள்ளலாரின் பசிப்பிணிபோக்கும் திறத்தினர் எனும் 71ஆம் பாடலும் தமிழலங்காரத்தில் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுதற்கேற்பத் தமிழை இழித்துரைப்பாரைத் தலை குனியச் செய்யும் திறத்தினர் எனக் கூறும் 104ஆம் பாடலும் அடங்கும்.

இவ்வாறாகத் தொல்காப்பியம் முதல் இக்கால இலக்கியம் ஈறாக இலக்கண இலக்கியப் பதங்களுடன் மூக்கப்பிள்ளையைப் பொருத்திப் பார்ப்பது அதி அற்புதமாக உள்ளது. இதற்குத் திலோத்தமை என்ற சொல்லின் பொருளாழத்தைப் பொருத்தியுணர்தல் தகும் என்பது என் கருத்து.

தேவலோக நாட்டியக் கணிகையருள் திலோத்தமையும் ஒருத்தி. அவளுக்கு அப்பெயர் அமைந்ததன் சிறப்பைப் புலவர்கள் வெகுவாகப் பாராட்டுவர். திலம் என்றால் எள். சிறு அளவான எண்ணெய் வித்தான பொருள். உலகில் அழகான பொருள் என எதைக் கருதுகிறோமோ அந்தந்தப் பொருள்களின் அழகையெல்லாம் எள்ளளவில் எடுத்தெடுத்து அவற்றையெல்லாம் ஒன்று திரட்டினால் எப்படியிருக்குமோ அதுபோன்ற ஒட்டுமொத்த அழகுப் பதுமையானவள் தான் திலோத்தமை என்பர். அது போலவே ஈண்டு மூக்கப்பிள்ளையைப் பெரும்புலவர், எல்லாத் தமிழ்ப் பதங்களோடும் பொருத்தியவாறு பிள்ளையவர்களைத் தாம் அனுபவித்ததோடு பிறரையும் (வாசகரையும்) அனுபவிக்கச் செய்கிறார் என்பதே இவ்வம்மானை நூலின் இலைமறை காயான கருத்தாகும்.

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அறிவியல் உறவும் - ஆன்மீக உறவும்

(டாக்டர். **கே. பாலகிருஷ்ணன்**)

சில ஆண்டுகள் கழிந்தன. திட்டத்தை நாங்கள் ஓரளவு மறந்து விட்டோம் என்று கூறலாம். நான் அழகப்பா பல்கலைக் கழகத்தில் சிறப்புநிலை விஞ்ஞானியாக இருந்த காலம். ஒருநாள் திரு. ப. சிதம்பரத்தின் நேர்முக உதவியாளர் திரு. பெருமாள் என்னை தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு அமைச்சர் அவர்கள் வேளாண் அறிவியல் மையத்தின் திட்ட அறிக்கை நகலையும், அதற்கான கடித விவரங்களையும் உடன் அனுப்ப கோருகிறார்கள் என்ற செய்தியைச் சொன்னார்கள். திரு. ப. சிதம்பரம் அவர்கள் அச்சமயம் மைய அரசின் நிதித்துறையில் மாநில அமைச்சராக இருந்தார்கள். அவர்களின் முழு முயற்சியால் குன்றக்குடியில் வேளாண் அறிவியல் மையம் அமைக்க வாய்ப்பு கிட்டியது. இந்த மையம் சிவகங்கை, இராமநாதபுரம் மாவட்டங்களில் வேளாண்மை சார்ந்த அனைத்துத் துறைகளிலும் மக்களுக்குப் பயிற்சி கொடுத்தும், மாதிரிப் பண்ணைகள் அமைத்தும், தொழில் நுட்ப திட்ட அறிக்கைகள் தயாரித்து சிறப்பாக செயல்பட்டுக் கொண்டு இருப்பது இப்பகுதி வேளாண் மக்களுக்கு ஒரு வரப்பிரசாதம்.

ஒரு கட்டத்தில் பால் பண்ணைகள் அமைப்பதற்கு உயர்தர கறவை மாடுகள் போதிய அளவில் கிடைக்கவில்லை. அடிகளார் அவர்கள் கன்று வளர்ப்புத் திட்டத்தை பல்கலைக் கழகத்தின் உதவியால் தயாரித்து அதன்மூலம் இக்குறையைத் தீர்க்க முயன்றார்கள். வறண்ட காலத்தில் கறவை மாடுகள் குறைந்து (DRY PERIOD) பால் கிடைக்காத காலம் இருப்பதற்கும், உயர்தரக் கன்றுகள் பெறுவதற்கும் நவீன செயற்கை கருவூட்டு முறையை முதன் முதலாக குன்றக்குடி கிராமத்தில் அறிமுகப்படச் செய்தார்கள்.

வெள்ளாடுகள் பயிர்களை மேய்வதினால் வரும் பாதிப்பை தவிர்க்க “தொட்டில் கட்டி வளர்ப்பு” முறையை இளைஞர் பண்ணையில் மாதிரியாக அமைத்து இம்முறையை ஊக்குவித்தார்கள்.

தென் மாவட்டங்களில் ஊரணிகள் என்று சொல்லக்கூடிய கண்மாய்கள் ஒவ்வொரு கிராமத்திலும் அதிக எண்ணிக்கையில்

இருக்கின்றன. குன்றக்குடியில் மாதிரியாக ஒரு ஊரணியில் மீன்கள் நவீன முறையில் வளர்த்தால் கிராமப் பொருளாதாரம் உயரும் என்று திட்டக்குழு தீர்மானித்தது. இதற்கு மீன் வளர்ப்போர் கூட்டுறவுச் சங்கம் ஒன்றும் குன்றக்குடியில் அமைக்கப்பட்டது. முதலாம் ஆண்டு மீன் வளர்ப்பில் கணிசமான லாபம் கிட்டியது. அதன் அடிப்படையில் இரண்டாம் ஆண்டு இன்னும் சில ஊரணிகளில் மீன் வளர்க்கத் திட்டமிடப்பட்டது. ஆனால் போதிய மீன் குஞ்சுகள் அக்காலத்தில் கிடைக்கவில்லை. மீன் உற்பத்தி குறைந்தது.

அடிகளார் அவர்கள் நாமே ஏன் மீன் குஞ்சுகள் வளர்க்கும் தொழிலை அமைக்கக்கூடாது என்று வழக்கம்போல் தனக்கே உரித்தான சிந்தனையோடு வினா எழுப்பினார்கள். உடனடியாக கால்நடை அறிவியல் பல்கலைக் கழகம் தொடர்பு கொள்ளப்பட்டது. தமிழக அரசின் மாவட்ட மீன்துறை இதற்கான தொழிற் திட்டம் தந்து உதவியது.

நிபுணர் குழு பல இடங்களுக்குச் சென்று பார்த்து, திருக்கோளக்குடியில் எப்பொழுதும் நீர் வந்து கொண்டிருக்கும் பகுதியை மீன் குஞ்சு வளர்ப்புக்காக தேர்ந்தெடுத்தது. திட்டக்குழு நேரடியாக இத்திட்டத்தை செயல்படுத்த முன்வந்தது. இத்திட்டத்திற்கு இந்தியன் ஓவர்சீஸ் வங்கி முப்பத்து நான்காயிரம் ரூபாய் கடன் உதவி வழங்கியது. பல்கலைக் கழக மீன் துறை பேராசிரியர் நாகூர் மீரான் தஞ்சையிலிருந்து அடிக்கடி வந்து தொழில் நுட்ப ஆலோசனைகளை வழங்கி வந்தார்கள். அவர்கள் இன்னும் குன்றக்குடியுடன் இணைந்து மாவட்ட கண்மாய்களில் மீன் வளர்ப்பதற்கு வழிகாட்டி வருவது, அவர்கள் சமூக சேவையில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருப்பதை சுட்டிக் காட்டும்.

திட்டக்குழுவின் மீன் குஞ்சு வளர்ப்புத் திட்டம் வெற்றிகரமாக முடியவில்லை. திருக்கோளக்குடியில் நீர் வசதி இருந்தும் மற்ற சூழ்நிலை சரியாக அமையாதது இதற்கு காரணம். ஆயினும் இன்று கிராமங்களில் இது ஒரு முக்கிய தொழிலாக வளர திட்டக்குழு பயிற்சியும் மாதிரிப் பண்ணைகளும் அமைத்து உதவி வருவது ஊராட்சி ஒன்றியங்களின் வருவாயை பெருக்கக்கூடிய தொழிலாக பரவி வருகிறது. ஒரு ஏக்கர் நீர் பரப்பில் ஆறுமாதக் காலத்தில் ரூ. 25,000/- வருவாய் கிட்டும் என்று பார்க்கும் பொழுது கிராமப் பொருளாதார முன்னேற்றத்தில் மீன்வளர்ப்பு ஒரு முக்கிய பங்கை வகிப்பது தெரியவரும். ஆண்டுதோறும் திருப்பத்தூர் கோவில் ஊரணியில் அடிகளார்

அவர்களுடைய நேரடி முயற்சியில் பேராசிரியர் நாகூர் மீரான் வழிகாட்டுதலின் பேரில் மீன்கள் நவீன முறையில் வளர்க்கப்பட்டு வருகின்றன என்று குறிப்பிட வேண்டும்.

தொழில் நுட்பங்களோடு மட்டுமல்லாமல் வேளாண்மை கால்நடை அறிவியல் பல்கலைக் கழகங்களுடன் இணைந்து இத்துறையில் ஆண்டுதோறும் கருத்தரங்குகளை நடத்தி புதிய கண்டுபிடிப்புகளை மக்களிடையே அடிகளார் அவர்கள் ஆர்வத்துடனும் தன் முனைப்புடனும் எடுத்துச் சொன்றார்கள்.

இவை அனைத்தும் மக்கள் சிந்தனையில் செய்தி வடிவமாகத் தரப்பட்ட போதிலும் அவை சிந்தனைக்குரியவை. சிந்திக்க, செயல்பட பல நிறுவனங்கள், இயக்கங்கள், வல்லுநர்கள் ஈடுபட்டிருந்த போதிலும் சோர்வடையும் போதெல்லாம் "மாடுகள் கிடைக்கவில்லையா" என்றுகள் வளருங்கள்! மீன்கள் கிடைக்கவில்லையா? மீன் குஞ்சுகள் வளருங்கள்! நீர் போதிய அளவு இல்லையா? நீர் மேலாண்மையை கடைபிடியுங்கள்! என்று மாற்று வழிகள் காட்டி வெற்றி பெறச் செய்தவர்கள் அடிகளார் அவர்கள். தடை வளரும்பொழுது ஒவ்வொன்றிற்கும் காரணத்தை அறிந்து அந்தத் தடையை சுலபமாக நீக்கும் திறமை படைத்தவர்கள். அவர்கள் சமய, இலக்கிய, சமுதாய முன்னேற்றங்கள் என்று பல துறைகளில் தன்னை ஈடுபடுத்திய போதிலும், கிராம மக்களின் பொருளாதார மேம்பாடு அவர்களுடைய மூச்சாக இருந்தது என்று கூறலாம். "அந்தக் கனவுகள் நிறைவேறவில்லையே" என்று தன் மூச்சையும் விட்டு விண்ணுலகிற்கு சென்றவர்தானே!

(தொடரும்)

# பொங்கல் வாழ்த்து



பழமை புதுக்கித் தமிழ்மக்கள்
பாங்காய் வாழும் நெறிகாட்டும்
உழவர் திருநாள்; உழைப்பவர்தம்
உவகைத் திருநாள்; தைப்பொங்கல்
விழாநாள் வாழ்க! மனிதகுலம்
வேறு பாடில் லாது அன்பால்
தழுவி வாழ்க! இன்பமெலாம்
தழைக்கப் பொங்கல் வாழியவே!

# அருளாலய சிலை

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி -9)

கோயிலில் சிலையை வைத்துக்
குப்பிடும் வழக்கம் போலக்
கோயிலின் வெளிப்பு றத்தும்
குறிப்பிட்ட சதுக்கம், சந்தி
* கோயிலில் இடங்கள் மற்றும்
கும்பல்சேர் இடத்தி லெல்லாம்
கோயிலின் சிலையைப் போலக்
குறிப்பிட்டார் சிலையைப் பாரே!

வைக்கின்ற அதனைத் தானும்
வனப்புடன் முழுஉரு வாக
வைப்பதோ டன்றி மார்பாம்
வன்புறு அளவில் தானும்
வைத்திடும் வழக்கம் உண்டு!
வைத்திட்ட அவற்றிற் கெல்லாம்
வைகலும் பாது காப்பு
வசதியும் செய்வ துண்டு!

இப்படி வைக்கும் அந்த
இயல்பான சிலைகள் தம்மைச்
செப்பான உலோகத் தாலும்
செதுக்குறும் கருங்கல் லாலும்
ஒப்புயர் வற்ற தாக
ஒய்யார மாக வைப்பார்!
அப்படி யன்றி யாரும்
அருங்களி மண்ணால் வையார்!

அரசியல் தலைவர்க் கென்றும்
அரும்பெருந் தொண்டர்க் கென்றும்
பரசிடும் மொழியை, நாட்டைப்
பரிவுடன் புரந்தோர்க் கென்றும்
தரமுயர் அறிஞர், சான்றோர்
தரைபுகழ் திரைப் படத்தில்
உரமுடன் நடித்தோர்க் கென்றும்
உயர்சிலை வைப்பா ரிங்கே!

கோயில் இல்லாத

அங்ஙனம் வைக்கப் பட்ட
அருஞ்சிலை தானும் என்றும்
அங்கங்குறை பாடில் லாமல்
அங்கங்கே இருப்ப தற்கு,
இங்கெவரும் உத்திர வாதம்
இயம்பிடா ததனால், அந்தோ
பங்கத்தைச் சிலைக்குச் செய்வார்
பதுங்கிய பேடி *சில்லோர்!

பிள்ளையார் சிலையைத் தானும்
பெரியார்தான் உடைத்த போது
வெள்ளையாய் அறிக்கை விட்டு
விளம்பரப் படுத்தி மற்றோர்
கொள்ளையாய் எதிர்த்த போதும்
கொள்கையில் தளரா தவராய்ப்
பிள்ளையார் சிலையு டைப்பைப்
பலரறியச் செய்தா ரன்றோ?

இந்நாளில் அவர்போல் செய்ய
எவர்க்குந்துணி வில்லா ததனால்
இரவோ டிரவாய் கோழை
இழிசெயல் செய்கின் றார்கள்!
இல்லாமை யாலே கோயில்
இருஞ்சிலைத் திருடி வாழும்
இழிவினும் இழிவாய்ச் செய்தே
இருப்பதேன் உயிரோ டேதான்?

கோழையின் சிலையு டைப்பால்
குமுறிடும் கூட்டத் தார்கள்
கோழையைப் பிடிக்க வேண்டிக்
குறிப்பிட்ட செயல்செய் யாமல்
கோழையாய்ப் பொதுச்சொத் திற்குக்
குந்தகம் செய்வ தோடு
கோழையாய் மாறி வாழ்தல்
கொடுமையினும் கொடுமை யன்றோ!

---
சிலபேர்

கலவரம் வெடிப்ப தாலே
கல்வீச்சும் பேருந் தெரிப்பும்
பலவித மாக எங்கும்
பரவியே நடக்கும் போது
நிலவரம் கட்டுக் கடங்கா
நிலையினால் உயிர்ச்சே தந்தான்
சுலபமாய் நடக்க, நாடே
சுடுகாடாய் மாறல் நன்றோ?

பொருட்சேதம் சொத்துச் சேதம்
போக்குவர விடையூ றென்னும்
அருட்சேதக் காரி யத்தை
ஆர்ப்பரித்துச் செய்ய, எங்கும்
அருட்குணச் சிலையாய் நிற்போர்
ஆர்க்குத்தான் போதித் தார்கள்?
இருட்குண இருசா ரோரே!
இங்கிதனை எண்ணிப் பாரீர்!

உடைமையின் சேதந் தன்னை
உடனடி நிவார ணத்தால்
கடமையாய் அரசும் மிக்கக்
கருணையின் தொண்ட மைப்பும்
திடமுடன் சரிசெய் தாலும்
திரும்புமா போன உயிர்தான்?
மடமையாய் எதையும் இங்கே
மறுபடி செய்யா தீர்கள்!

என்றுநான் என்னுள் ளத்தில்
எண்ணியவா றிருந்த போது
நின்றபடி ஒருவர் சொன்னார்
"நினைத்தவை சரியே! ஆனால்
மன்றுபுகழ் சிலையின் மாண்பை
மதிப்போர்கள் எதையும் செய்யார்!"
என்றதும் எழுந்து நின்றேன்
எழிலான அருளா லயத்தே!

---

# சிந்தனை வட்டம்

முள்ளாய் குத்திக் கொண்டிருக்கும் முல்லைப் பெரியாற்றுப் பிரச்சினை குறித்து கடந்த மார்கழித் திங்கள் 2006 மக்கள் சிந்தனையில் தவத்திரு பொன்னம்பல அடிகளாரின் தலையங்கம் என்னை மிகவும் வியப்பிலும், மகிழ்ச்சியிலும் மூழ்கச் செய்துவிட்டது.

அடிகளின் பல்வேறு தலையங்கச் செய்திகளை நான் படித்திருந்தபோதும், பெரியாற்றுக் கருத்துப் பெரிதும், முக்கியத்துவம் பெற்றதாகும். தெய்வத்திரு மகாசந்நிதானத்தின் மறு உருவாக என் நெஞ்சில் பொன்னம்பலனார் தோன்றிவிட்டார்கள். தெய்வீகம் உண்டு, திருமடத் தொண்டு உண்டு, அவைகளைக் கவனித்தால் போதுமென்று இருந்திடாது மக்கள் தொண்டே மகேசன் தொண்டு எனக் கொண்டு பல்வேறு சமுதாய, சமூகப் பணிகளை மேற்கொண்ட மகாசந்நிதானம் போல் நம்முடைய பொன்னம்பல அடிகளும், எண்ணி சமூக, சமுதாய தேசியத் தொண்டு செய்வதும், பேசுதலும், எழுதுவதும் தமிழர்களின் தவப்பயனாகும். தலையங்கத்தில், இன்றும் அணை தோன்றிய வரலாறு தெரியாமலிருக்கும் தமிழக மக்களுக்கும் ஏன்? அரசியல் பேசுவோர்க்கும் அணையின் வரலாற்றின் சுருக்கத்தையும், கொள்ளையடிப்பதே குறியாகக் கொண்டிருந்த வெள்ளை இனத்தில், ஒரு வெள்ளை உள்ளம் கொண்டு அரும்பாடுபட்டு அணையை எழுப்பிய பொறியாளர் பென்னிகுக்கை நன்றியுடன் பாராட்டி இருப்பதோடு பொதுவுடைமை பேசும், கேரள அரசின் முதல்வர் அச்சுதானந்தருக்கும் மனித நேயத்தை நினைவூட்டிய அடிகளாரின் தலையங்கம் பொன்னெழுத்தால் பொறிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

அடிகளாருக்கு ஆயிரம் நன்றிகள்

– கவிஞர். **ஆ. குறள்பித்தன்**

முத்தமிழறிஞர் கலைஞர் முதல்வர் அடிகளார் அவர்களைச் "சமத்துவப் பெரியார்" எனத் தொல். திருமாவளவன் பாராட்டியதைச் சுட்டியும், பாப்பாப்பட்டி, கீரிப்பட்டி, நாட்டார் மங்கலம், கொட்டக்கச்சி ஏந்தல் ஆகிய நான்கு ஊராட்சிகளின் தேர்தல் பற்றி மேற்கொண்ட விசாரணைக் குழுவினர் நீதியரசர் திரு. எஸ். இராமசாமி, முன்னாள் நீதியரசர் திரு. எம்.ஜனார்த்தனம், முனைவர். திருமதி. மோகினிகிரி, திரு. மார்க்கண்டன் ஆகியோரின் அறிக்கையைச் சுட்டியும், மாண்புமிகு டாக்டர். கலைஞர் அவர்களின் சமூக நீதிப் பயணத்திற்குக் கிடைத்த மகத்தான வெற்றி எனப் பாராட்டியது க்ண்டு மனதாரப் போற்றுகிறோம்.

தீண்டாமைக்கு எதிராகச் சட்டங்கள் பணி செய்வதை விட, சமூக மாற்றங்கள் ஏற்படுத்த விதைக்கும் கருத்துச் சலவை செய்யப்பட வேண்டும். ஊடகங்கள், நூல்கள், இதழ்கள் வாயிலாகக் கருத்துக்கள் வழி மனமாற்றம் ஏற்படுத்த அல்லும் பகலும் அயராது பாடுபட்டுவரும் தங்களின் மேலான பணிகட்குத் தலைவணங்குகிறோம்.

– ம. **இளங்கீரன்**, குறிச்சி

அழுத்தப்பட்டு ஒடுக்கப்பட்ட தாழ்த்தப்பட்டோரின் நான்கு ஊராட்சிகளிலும், மீண்டும் அவர்களே பதவியேற்கச் செய்து சமுதாய நீதி வழங்கிய கலைஞரை தங்களுக்கே உரிய அழகிய சொற்றொடர்களால் பாராட்டி எழுதிய தலையங்கம் உணர்ச்சிமயமாகத் திகழ்கின்றது. தந்தை பெரியாரின் குருகுலத்தில் பயின்று, பேரறிஞரின் பாசறையில் வளர்ந்து 60 ஆண்டுகளாய் சமூக நீதிக்குப் போராடும் கலைஞரைச் சரியான வகையில் தகுதியான தொடர்களால் பாராட்டிய தங்கள் உயரிய எழுத்து வண்ணம் நெஞ்சில் கல்வெட்டாய் மாறியது.

இதழில் இடம்பெற்ற பிற கட்டுரை, கவிதைகளும் அருமையாக உள்ளன.

–கவிவேந்தர். **வேழவேந்தன்**, சென்னை.

கே.எம்.எஸ். என்றாலே பேர்போன நல்விலாசம்!
வா எம் கடைக்கென்றே வாய்குளிரத் – தாமாகப்
பாரதிப் பண்ணையைப் பார்புகழ் தேவகோட்டை
யார்வைத்தார் அன்னவர்க்கா மாய்ப்பு!
குள்ள உருவம்! குளிர்தென்ற லின்பேச்சு!
அள்ளக் குறையா அடிகளிடம் – கள்ளமிலாக்
கம்யூனிஸ் ட் நட்பான காந்திக் கதராடை
அம்மான்! அவர்க்கா இறப்பு?

–தமிழாகரர். **தெ. முருகசாமி**, புதுச்சேரி

## குடியாட்சி முறை

குடியாட்சியில், ஒழுங்கு முறையை மக்களாகவே இசைந்து ஏற்றுக் கொள்ளுகின்றனர். இசைந்து ஏற்ற ஒழுக்க முறையின் பயனாய்ச் சிறுபான்மையோரும் பெரும்பான்மையோரின் முடிவுகளுக்கு இசைந்து ஒழுகுகின்றனர். பிரச்சினைகளுக்கு விதித்த முடிவுகளை மாற்ற வேண்டுமெனில் அமைதியான முறையிலேயே மாற்ற முடியும் என்பதை அனைவரும் ஏற்று நடக்கின்றனர். எனவே, குடியாட்சி முறை என்றால், பிரச்சினைகளுக்கு அமைதியான வழிகளில் தீர்வு காண்பதாகும்.

நல்லதொரு சனநாயக ஆட்சியில் இசைந்து ஏற்ற ஒரு கட்டுப்பாடு இருத்தல் வேண்டும். கட்டுப்பாடும் ஒழுக்கமும் இல்லையெனில் சனநாயகம் இல்லையென்றே கூறலாம்.

**– அண்ணல் நேரு**

உ

சிவமயம்



திருக்கயிலாய பரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம் –

பிரான்மலை வகை ஐந்து கோவில்கள்

குன்றக்குடி

# அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்

# தைப்பூசப் பெருந்திருவிழா

## திருநாள் விவரம்

| நாள் | திருநாள் | நேரம் | வாகனம் |
|---|---|---|---|
| தை 9 செவ்வாய் 24.1.2007 | 1 | காலை 5.30க்குமேல் 5.55 மணி | கொடியேற்றம் |
| தை 14 ஞாயிறு 28.1.2007 | 6 | இரவு 8 மணி | தங்கரதம் |
| தை 16 செவ்வாய் 30.1.2007 | 8 | இரவு 8 மணி | வெள்ளிரதம் |
| தை 17 புதன் 31.1.2007 | 9 | மாலை 3 மணி | திருத்தேர் |
| தை 18 வியாழன் 31.1.2007 | 10 | காலை 11 மணி | மயூரகிரி புஷ்கரணி தீர்த்தவாரி |
| | | பகல் 12.30 மணி | பழனியாயி ஊரணி தீர்த்தவாரி |

எல்லாத் திருநாள்களிலும் நாள்தோறும் நாதசுர இன்னிசையும், வேதபாராயணமும் திருமுறைப் பாராயணமும் நடைபெறும்.

குன்றக்குடி வருக! குமரன் அருள் பெறுக!!

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
## பழநி
### பரிமள விலாஸ்
# S. சித்தநாதன்
## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி – 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!






**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - January 2007
Date of Publication 20-01-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008



பெறுநர்
திரு ஆதீனகர்த்தர் அவர்கள் அவர்கள்
கோவளூர் ஆதீனம்
கோவளூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர்: சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆: 264166